ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# அரியக்குடி யலர்மேன்மங்கை பிள்ளைத்தமிழ்.

இஃது

இராமநாதபுரம் சீமை

சூரியங்குட்டமிருந்து ஆரியக்குடி வந்திருக்கும்

வேலாழர்

கிருஷ்ணமாசாரிய ரவர்கள்

இயற்றியது.

மேற்படி அரியக்குடி

ராம-சா-அரங்கநாதச்செட்டியார்,

லெ-ராம-அரங்கநாதச்செட்டியார்,

சா-கி-அரங்கநாதச்செட்டியார்

இம்மூவர்களாலும்

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1902.

பிலவ௵ மாசிமீ.



ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்.





ஸ்ரீ [illegible]ராமாநுஜாய நம:

# அரியக்குடி யலர்மேன் மங்கை பிள்ளைத்தமிழ்.

## பாயிரம்.

### நம்மாழ்வார் துதி,

சீர்கொண்ட வாயிரந் திருவாய் மொழிக்கதிர் திசைச் செல
விடுத்தவிஞ்சைச், செறியிருள்க ளிந்தச் செகத்தப் புறத்
தோடல் செயவுலக காரணுன்றன்,

பேர்கொண்ட வடியா ருளக்கமல நெகிழப் பிறங்குபல சமய
மென்னும், பிசிதாச னர்மாள வெழுவகுள பானுவின்
பீடார் பதம்பணிகுவா,

மேர்கொண்ட முகமா மதிக்குமுன் னுடையாம லெதிர்நின்ற
வெனவிலங்கு, மிருகமல மிருகரத் தேந்திப் பவத்துழலு
மெம்போலி யர்க்கஞ்சலீர்,

தார்கொண்ட விவ்வடி யடைந்துய்மி னென்பபோற் றகைய
பய வரதமிருகைத், தாங்கியரி யக்குடியினு றையுமலர்
மேன்மங்கை தமிழனு தினந்தழைப்பவே. (க)

### ஆழ்வார்கள் துதி.

எறிகடல் வளாகத்தி லபரதச வவதார மிவையென்ன வவத
ரித்தாங், கெவருமுணு மாறுவரியைக்குயின் முகந்தெ
ன்று மினியபுன லாய்விடுதல்போ,
லறியவெவ் வெவருக்கு முரியமொழி யால்வேத வலைகடல்
கடைந்தெடுத்தின், னமுதவுரை யாலிந்த வுலகத்தை யுய்
வித்த வாசிலாத் தேசிகர்களா,
யுறுபொய்கை பூதர்பேய் மழிசைப் பிரான்மாற ரோங்குகுல
சேகரன்சீ, ரொண்புதுவை நகராளி தொண்டர்பா தத்
தூளி யோவிலாப் பாணர்பெருமான்,
மறுவிலா மூலமறை யைத்திருவின் மணவாள மாயனை வலி
ந்துகொண்ட, மங்கைநகர் நாதனென் றிவர்செய்ய பாத
ங்கள் மலரெங்கண் முடியினுக்கே. (உ)

### உடையவர் துதி.

பரசமய மெனும்வெய்ய கண்டக தருக்குலம் பாழ்பட நிலத்
திலங்கைப், பற்றுசுடர் வடிவாய பரசுவென வும்பரமபா
வனமுடைக் கமலமா,
னரசனுயர் மதநிலை பெறச்செய் தெடுத்ததொரு வம்பொன்
வெற்றி த்துவசமே, யாமெனவு மொளிர்துய்ய திரிவேணு
தண்டமு மகன்மார்பி னுருவொடுற்று,

விரவுமெழின் மறைநாலெ னத்திகழ கிற்குமுப வீதமுஞ்
சிகையுநேராய், விரிபுண்டரக் குறியும் வேறுதய வாதித்த
விசயமென வார்த்தசெம்மைப்,

புரியாடையும் பொருவி லெதிராச ரிருசரண புண்டரிகமும்
பணிகுவாம், புகரிலா வரியைக்க ணலர்மீது மங்கையடி
புனைதமிழ் நிதந் தழையவே. (௩)

வேதாந்த தேசிகன் துதி.

அம்புவியி னிலையிட்ட நல்வரம்புஞ் சென்றளக்க வருமதி
யாழமு, மணவியைங் குருநெறியி னிறையுமெதி வரனெ
ன்ற வழிவிலா திலகுகுளனின்,

பம்பிசைய வெழுபத்து நாலுமடை வாயின்வழி பாயுரையி
னமுதினேங்கும், படியிடை நிலேஇய பரமேசமான் மல
மென்ற பைங்கூழ்கள் பரசமயமாம்,

வெம்பு கவரிக்குல நிதந்தின்று மாயாது மிகவோம்பு செய
லினை, வேலியென வுஞ்சொன்மழை பெய்துவளர் வித்த
லான் மிசைமருவு குயினென்னவு,

மும்பர்துதி செய்யுநிக மாந்தகுரு வின்பத யுகஞ்சிர மூளம்
புனைகுவா, மொழிவிலா வரியைக்க ணுறையுமலர் மேன்
மங்கை யொண்டமிழ் நிதந்தழையவே. (௪)

ஸ்வாசார்ய பரம்பரா.

திருமால் கமலை சேனையர்கோன் றிருநாவீற னாதமுனி, சீரு
ய்யக் கொண்டார் மணக்காற் சிறந்தார் யமுனைத் துறை
வர்பெருந்,

குருவாநம்பி யெதிப்பெருமான் கோவிந்தாசாரியர் பட்டர்,
குலவேதாந்தி நம்பிள்ளை கோலக்கண்ண பாதர்நெறி,
யொருவா வரங்கேசாரியர்பே ரோங்கும் கேசவாரியர்நன்,
குறுமாவாசர் கேசவரென் றுலககுருக்களா யுய்ய,
வருமாரியர்க டாள்வணங்கி வைணவம்பார் மல்கியெழ, வந்
தைந்துறுப்பு நல்குமெதி வரர்வண் சடகோபரைப் பணி
வாம். (௫)

முனிவன் முகயா நாரசிங்க முதல்வன் சபரி முறைவழுவா,
முனிவண் சடகோபரை முதலா முப்பான் மூவர்த்தொழு
தேத்தி,
யினிமை யுடன் வைணவக் குறியைந் தெம்போ லியர்க் கீய்
சடகோப, வெதிதாள் வணங்கிச் சடகோபனெதிக்கோ
னிருவ ரெழுந்தனரோ,
வெனவந் துபயமறைப்பொரு டோர்ந்தெய்து மடியார்க் கினி
தருளி, யிவர்பேர் தரித்த வெதிவரனு ரிவர்க்கா ளாகி
யெமதுபவத்,
தனித க்கடமுன் சுவறுவிக்குந் தகையாற் றிருமாமுனு மொ
வ்வாத், தகையா ரரங்க நாதவெதி த்தலைவர்க் கடிமைபுரி
குவமால். (௬)

அழகியசிங்கர் கட்டளைக்கலித்துறை.

தொழுகாவியங்கணி மாமலராடன்றொடைவதிய
விழுகாவியங்கணி மாசிங்கற்காட்செய்வமேயக்கணே
யொழுகாவியங்கணி யுய்வகைமாயனொடுபொறிக்கா
மெழுகாவியங்கணி கழின்பமோடுமிசைபெறவே. (௭)

## அவையடக்கம்.

பாலாழி யின்பெருமை யொருபுனித முணராது பருகுவா
னுற் றோர்ஞமலி, பரிவின்வா யிடினதற் கொருபழியு மெ
ய்தாத பரிசுன்னி யென்புறுவான்,

மேலாய வரியைக்க ணலர்மங்கை சீர்சில விளம்புவா னமை
தனுற்றேன், மேதினியி லஞ்சத்தி னீர்மையுடை நஞ்செ
வியின் மேவிவெளி றிக்கருகியே,

நாலாய சொற்குற்ற மேவெனது புன்மொழியும் ஞாலத்தி
லுயர்நாவலீர், நபமிசை வருங்கொண் டலேப்புலா லுவரு
ருவ நண்ணுகட னீரணைந்து,

மாலா யுவந்தெவரு முணலான நன்புனலின் வகையெய்து
தகைமையெனவே, மானிலத் தவரினிது கொண்டாட
வினியவாய் வாயுமா லெனமதித்தே. (அ)

பாயிரம் முற்றும்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அரியக்குடி யலர்மேன்மங்கை பிள்ளைத்தமிழ்

## காப்புப்பருவம்.

### பரமபதநாதன்.

சீர்கொண்ட செங்கமல மலர்மீ தெழுந்தவய சிவவிந்திராதி
யிமையோர், செகதலத் திசைமனிதர் முதலாய பலதேக
செனனவான் மாக்களென்னும்,
பேர்கொண்ட மணியிட் டிழைத்துவேத் தியமுறுப் பெற்றி
பெறு மாயையரணுட், பேணியொரு கோலோச்சு பரம
பத நாதனிரு பீடுறுபதம் பணிகுவாந்,
தார்கொண்ட கொண்டல் செந் திலதவெண் பிறைபுருவ
தனுவமுத மதியமேந்தித், தண்வான மென்னத் தயங்கி
வட வேங்கட தடச்சிகர வெற்பினிந்தப்,
பார்கொண்ட விசையரியை நகர்வந்து குடிகொண்ட பது
மையெம தம்மையொன்றும், பழுதுறு துயிர்முற் றளிக்
குமலர் மீதுவரு பாவையைக் காக்கவென்றே. (க)

### திருமகள்.

வண்டினம் பலகோடி மதுவுண்டு றங்குபசு வனவன மடர்
ந்த திருமான், மார்பகல வரையுலா மொருமானெனக்
கலாமயிலெனன விருந் தொளிகுலாய்க்,
கொண்டமணி நிலையாடி யிற் சுடரு லர்ந்தனொரு கூரணிநித
ங்கணோக்குங், கோதையருண் மயையொன்று நிக்கிரக
மணுகுறு க்கோமளக்கொடி பணிகுவா,

மண்டியெழு வாசக் கருங்கொண்டலின் கீழொண் மதிய
மென வம்பணிந்து, வார்கொண் டணிந்ததன வஞ்சகோ
ரங்கள்குளிர் வனசமுக நோக்கவாங்கண்,
கெண்டையென மிளிரங்க ணளியம்பு யத்துலவு கிளியென
முலைக்கணேக்கக், கிளரரியை யலர்மங்கை யைக்கணவன்
முனிவுமுனி கிளிமொழியினைக் காக்கவே. (உ)

புவிமகள்.

உந்தியங் கமல த்தெழுந்துமாயா வலையுறுஞ் சேதனர்க்கெ
லாஞ்சீ, ருயர்பதம் பெற்றதன தெழின்மகன் றந்தபல
வுயிர்முழுது மிடையினேந்திச்,
சிந்தையன் புடனுரு மின்னமுத மூட்டியிடர் தீரவளர் வித்
தருள்செயுஞ், சேயிழை தனைப்புவி யினைத்தேவ தேவ
னொரு தேவியை வணங்கல் செய்வாம்,
வெந்தொழிலன் வன்கண னிராவண னிடுஞ்சிறையின் மே
வியிந்திர ணுதியோர், வெய்ய தெறு சிறை வீட்டுமைமை
யைக் கோகனக விரைமலர்க் கோயில்கொண்ட,
பைந்தொடியை மணிவெற் பெழுந்துபூப் பலபூத்த பைங்க
னக வல்லியைப்பூம், பார்முழுது தொழுதேத்துமரியை
க்க ணலர்மீது பாவையைக் காக்கவென்றே. (௩)

நீளாதேவி.

கோகனகை வேறு மெனப்பட்டர் நாதனுயர் குலநந்த னத்
தெழுந்து, கோலவரி சந்தனமிசைப்படர் பசுங்கற்ப கோ
மளக் கொம்பரன்னள்,

சாகையென லாயினிய பாமாலையுங்கொண்ட சரிகுழற் பூமா
லையுந், தங்கொரு பரம்புருடனை த்தன வசங்கொண்ட தா
ய்நீளை யடிகணிணைவாம்,

மாகனக வம்போருகச் செய்ய பீடத்து வளர்கலச வம்போ
திவாய், வந்ததனையம்புட்க லாவர்த்த மேமுதல வாரித
கடங்களேந்தி,

யோகையுட னெண்டிக்கி னிசைகர மதத்தந்தி யொளிர்மலர்
நிரந்தபுனலால், யொருமஞ்சனஞ் செய்ய மகிழரியை மலர்
மீதி லொண் டொடியினைக் காக்கவே. (௪)

சேனைநாதன்.

ஏவன்ற னங்கைக்கொண்ட பொன்வேத் திரத்தினுதி யெண்
ணிலா வண்டகோடி, யெய்திநிலை கோடாம லென்றென்று
முறைகின்ற வேவனடி யம்புயத்துட்,

பவன் பிரம னிந்திரன் முதல்வான நாட்டுக்கொர் பதிகள்
முடி பட்டிரிஞ்சும், பலவேறு வடிவுள்ள வச்சேனை நாத
னிரு பதகமல மஞ்சலிப்பாந்,

தவநாளு மெவள்பாத கமலத்தின் மிசையும்பர் தருமலரு
மம்புயப்பூந், தண்மலரு மென்பொனித ழித்தாருடன்
னீப தருமலரு நாறுகிற்கு,

மவமிலா தெவளிலா தான்மராசிக் கொர்கதி யடைதலீங்
கரியதம்மா, வவளையலர் மேன்மங்கை யைப்பொருவி லரி
யைக்கொ ரரசியைக் காக்கவென்றே. (௫)

## அநந்தகேருடர்.

எக்கால மெத்தேச மெவ்வடிவு கட்குசித வெவ்வடிமை யும் பல்வடிவா, லினித னுபவித் தூரிய சேடமே தற்கென்று மியலுடைமையிற் சேடனாய்,
தக்கா ரெணுஞ்சேட முறுபொரு டமக்கெலாந் தகைமை பெற் றரியநியமச், சனகாதி கட்குரு வொருபரஞ் சோதி யைத் தன்வசங் கொண்டவனை,
யக்காரணன் முன்ன ரெதிர்நிலைக் கண்ணாடி யாமென விளங் கியெதுபோ, தருள்வதென வேதங்கள் சிறைபாட நிற் கின்ற வக்கெருடனைத் தொழுவமா,
னெக்காய வினைபோக வுருகன்பர் நெஞ்சென்னு நிலயத் திருந்துபயமா, நிதியுதவு மரியைக்க ணலர்மீது மங்கை யை நிமலையைக் காக்கவென்றே. (கூ)

## வியூகம்.

சுத்த தத்துவ வடிவ நித்தியர் தமக்கலாற் றெழுவுனக் கா ணவரிதாய்ச், சுடர்தனிலை யுன்னியெளிதிற் றேவர் தொ ழுது வெந்துயர் செகுத்தருள் பெற்றுநற்,
சித்திபெற வம்போதி வந்துவளர் பரவாசு தேவனு மளிப் பழிப்புத், திதிசெ யனிருத்த சங்கருடண பிரத்தியுமன திவ்வியவடி வினருமான,
வித்தக வியூகவவ தாரரொரு நால்வரையு மிகவடி வணங்கி யெழுவாம், வேங்கட வரைத்தாம முந் திரு வரங்கமொடு விண்டுவி னகன்மார்பமு,

நத்துமடி யவர்சிந்தை யுங்கமல மாளிகையு நால்வேத சிரமு
மெனவே, நாளுமரி யைக்கண்வள ரலர்மீது மங்கையெழி
னங்கையைக் காக்கவென்றே. (எ)

விபவம்.

எண்ணிட் டளப்பரிய வேதங்க ளொருநான்கு மெத்தகைய
யோகியர்களு, மிறையேனு முணர்கிலா திச்சையின் படி
யாக விவ்வுலகி லவதரித்த,

நண்ணு மச்சங் கமட வாராக நரசிங்க நயவாமனம் பரசு
வின், ஞஞ்சிலம் படைராமர் கண்ண னங்கற்கியெனு நகு
விபவ வடிவர்காக்க,

வண்ணவின் னுதல்வா ணியுமை யிந்திராணி முதன் மங்கை
யர் கழுத்திலிட்டு, வாங்காத பொன்னுணின் வடிவமாய்
மல்குமொரு மங்கலத் தேவுமாகிக்,

கண்ணனம் புருடவுருவங்களா யிலகவெழு கன்னியுரு வெ
வையுமிவளே, காணென முனிக்குழா மோதுமரி யைக்
கண்வளர் கன்னியலர் மேன்மாதையே. (அ)

அந்தரியாமிவேறு.

வேதத் தொகையுஞ் சூரிகளா மேலோர் குழுவுமெதிர்கா
விதியி னடுவெணி டுந்தான விதஞ்செய் தொளிர் முக்கு
வடிவாம்,

பரதப் பகுதிப் பலகை யின்வாய்ப் பங்கேருகன் சங்கர
முதலாம், புல்சேதன வக்கம் பரப்பிப் பரமனுடன் வ
லாட் டயர்கால்,

பேதத் தவர்வல் வினைக்கவற்றுன் மேல் கீழாகப் பெயர்த்
துவைக்கும், பெருமை விளையாட் டுடையரியைப் பெரு
மாட்டியை யம் மலர்த்திருவைக்,

கோதற் றிலகு முயிர்கடோறுங் குடியா யொருதா னினித
மர்தல், கூரந் தரியாமியின் வடிவங் கொண்ட பெருமான்
காக்குகவே. (கூ)

அர்ச்சாவதாரம். வேறு.

சுரகங்கையிற் புனித மிகுகாவிரிப் பெருகு தூயநதி சூழரங்
கந், துன்னுநிதி யாய்வட மலைச்சிகர மேவிவளர் தொல்லை
முகி லாய்ப் பிறங்கி,

வரநண்ணு கரிவெற் பிடைப்பாரி சாததரு வாயெது கிரிக்
கொர் சுடராய், வந்து மற்றுங் கோயி லுறுமர்ச்சை
வடிவான மால்சரண் முடிக் கணிகுவாங்,

கரசுரபி யம்புயமும் விழிவாரிசங்களுங் கனதனப் பதுமமுகி
ழுங், கவினுலா முகபற்ப முஞ்சரண கஞ்சமுங் கதுவி யர
விந்த பீடத்,

தொருகொடி யெழுந்தென வெழுந்துலக மென்றகனி யுத
வுமரி யைக்கரசியை, யுயிரினுக்குயிராய வொருவற்கொரு
யிரா மொருத்தியைக் காக்கவென்றே. (ய)

முதலாவது காப்புப்பருவம் முற்றும்.



# இரண்டாவது

# செங்கீரைப்பருவம்.

பல்வேறு நிலமுந்த மிடைகொண்டொ ரேழாய படியுந்த
ளுயிரத்த, பரிதிமுடி யேந்திநொந் தாகந் துவண்டுவெதி பரி
சுன்னி யெனவனந்த,

னெல்வீழ் சிரத்தின்மிசை யடியிட்டு மேனிலாவிடுதலான்
மதியைமீதேந், தெழின்மிகுந் தெழுமாட விடையாடு
மடநலா ரிசைகருஞ் சூன்முகிற்கு,

நல்வாச வகிலூட்டி யம்பொன் வட்டம் பூட்டி நறுமலர்த் தெ
ரியல்சூட்டி, நாறுகுழ னிகர்காண மதிமறு வொழித்துச்
செய் நளிர்பொட் டிடாறுதற்குச்,

செல்வீழ் கரத்தர்நிகர் நோக்கரியை யலர்மங்கை செங்கீரை
யாடியருளே, தென்னுடு கதியெய்த முன்னுடு மொரு
செல்வி செங்கீரை யாடியருளே. (க)

இந்நிலத் தேவரு மிளங்கார்க ளிவையென்ன விணைகருங்
கோட்டு மோட்டி, னெருமையஞ் சாலிவய லிடைமேய்
தல் கண்டுள்ள மெழூசினங் கதுவிமள்ளர்,

துன்னுசூன் முதிர்வளை யினங்கொண்டு வீசவுதிர் சுடர்முத்
தொடுஞ் செறிந்து, தோயவெங் மிசையிலக நின்றவகன்
வானிற் சுலாய்த்திரை யருந்தி யொழுகு,

மின்னுடை முகின்மீது தாரா கணஞ் சூழ மேவுமதி வடிவ
காட்ட, மென்களை களைந்தொல்கு மடநலா ரத்தரளம்
விரிசிறைய புட்சினையெனத்,

தின்னிய கரத்தேந்து மரியைக்க ணலர்மங்கை செங்கீரை
யாடியருளே, தென்னாடு கதிபெய்த முன்னாடு மொரு
செல்வி செங்கீரை யாடியருளே. (உ)

முத்தம் பதித்திட்ட முற்றிலுந் தூதையொடு முதிர்பசும்
பொற்பாவையு, மூசொளியி னன்மணி விதங்கொண்டி
ழைத்த வெழின் முற்றுமொரு சிற்றிலிட்டுத்,

துத்தமொழி யின்பேதை மடநலார் மறுகாடு தொழில்புரிய
வங்கைவைவே, ருடரவீரக் கழல்பதந் தொட்ரவண்டர்
பொற்குஞ்சி தொடரச் சிறுர்கள்,

கொத்துவிடு சிறுதேர் சிதைப்பநொந் தனையாடை கோதை
யணி சிந்தினவெலாங், குலாசல மெனத்திகழ் தருந்தோ
ளின் மைந்தர் விடு கொய்யுளைய குதிரையந்தேர்ச்,

சித்தமென வருசெல வொழிக்கு மரி யைக்கரசி செங்கீரை
யாடியருளே, தென்னாடு கதிபெய்த முன்னாடு மொருசெ
ல்வி செங்கீரை யாடியருளே. (௩)

அன்னநடை யிட்டணி வயற்களை கடிந்தொல்கு மஞ்சொலி
ளவஞ்சியனையா, ரரிமதர் நெடுங்கணிழல் விரிபுனல்
விளங்குவன வணிகய லெனக் குருகுதாங்,

துன்னு மலகிற்கவ்வு தொழிலது மனங்கருது தொகுமுழு
தொழிற் கிழமையார், தொலைவிலதி சயமெய்த வது
கண்ட வொண்டொடித் தோகையர்க ளுணமெய்தி,

மன்னு மரவிந்தங் கருங்குவளை மெல்லாம் பன்மலர்க ளிவை
விழிக ளடிவாய், மருவுபகை யெனவெண்ணி யெனவேரு
டன் போக்கி வளர்விக்க வளர்செநெற்கூழ்,

சென்னிமுகி ெருடவோங்கு மரியைக் குடிக்கரசி செங்கீரை
யாடியருளே, தென்னாடு கதியெய்த முன்னாடு மொரு
செல்வி செங்கீரை யாடியருளே. (ச)

கடிகமழ் செழுங்கமல மங்கைகால் வதனம்வாய் காட்ட
விரல் கெளிறு காட்டக், கணைபுற முழந்தாள் வராலாமை
யுடனண்டு காட்டமடி திரைகள்காட்ட,

வடிவுதிகழ் வாளநகிலங் காட்ட வரியின்வளை வண்களங் காட்
ட விதழ்தான், வளர்செய்ய துவர்காட்ட மணிமுத்த நகை
காட்ட வள்ளைவார் குழைகள் காட்டப்,

படர்கெண்டை விழிகாட்ட மரைமுகையின் மேல்வண்டர்
பருமுலைக் கண்கள் காட்டப், பசியகுளிர் குழல்சைவ லங்
காட்ட நிறைதடம் பாவையர்த முருவுகாட்டுஞ்,

செடியில்வள மல்கரியை நகரத்து வந்தகொடி செங்கீரை
யாடியருளே, தென்னாடு கதியெய்த முன்னாடு மொரு
செல்வி செங்கீரை யாடி யருளே. (ரு)

வேறு.

மாலென லாயடி பாதலமுந்தலை வான்முகடுந் தொடலாய்,
வான்மதி யென்றுடு முற்றும் விழுங்கின வாயுமிழ்
கோபுரமுங்,

Digitized by Google

கோல நிலாமணி கொண்டு குயிற்றிய கொம்மையின் மாம
திலுங், கொண்ட னிறத்தவன் வந்து மகிழ்ந்துறை கொள்
கை குறித்தனனாய்ப்,

பாலினுருச்சுடர் சேடனுவந்து பரிந்துமணிக் கணமாம்,
பைம்முடி மேலெழு மண்டல மிட்டுறு பான்மை கடுக்கு
மெழி,

லாலிலகித்திக ழரியை நகர்த்திரு வாடுகசெங்கீரை, யத்த
மிருந்துறை நித்தமுகந்தவ ளாடுக செங்கீரை. (௬)

ஒளிர்பொன் விசும்பிடை மலரி னறுந்துக ளுக்கவடங்கிடு
மா, றுறுமது வின்றுளி சொரிய நிவந்துள வுயர் பொழி
லிற் புகுதாக்,

குளிரி னிருங்கதிர் குறைசுடைக்கலை கொண்டொருபா
கறுகர், கோல நறும்பல வின்கனி யின்சரி கூறிதெனக்
கருதா,

மிளிர் செமுகக் கடுவன் கையின் வவ்வுதன் வெய்யவனைக்
கைதொடு, மெய்யனு மானெனு மய்யனையுஞ்சிகி வெய்ய
னையும் பொருவு,

மளவில் பெருந்தகை யரியை நகர்த்திரு வாடுக செங்கீரை,
யத்த மிருந்துறை நித்த முகந்தவ ளாடுக செங்கீரை.(௭)

தண்புனை யின்னமு திட்டு வளர்த்தவர் தாள்பணி மக்களை
னத், தழுவு கருங்குயி னடியின் வளைந்தன சாலியினக்
குரல்தாம்,

பண்புற நீலித வாடையி னூற்றிய பால்வட மூத்தேயப், படையி னரிந்தனர் போர் புரி மள்ளர்கள் பகடு நிறைத் தன நந்,

திண்பட முன்னிவை காரணமா யிடர் செய்தன வென்றடி யாற், றேய்ப்பன போல மிதிப்பவை தள்ளிய சென்னெற் குவைபுரியா,

வண்பொன் மலைக்கிணை செய்யரியைத் திருவாடுகசெங்கீரை, யத்த மிருந்துறை நித்த முகந்தவ ளாடுக செங்கீரை. (அ)

தழுவு கருங்குயி னெனுமொரு பந்தரி ரூழையினக்கா ல்க, டகநட் டொளிர்பசு மரகத செந்துகிர் தழைகமுகும் படுவோ,

டெழுதலை விரிய வரம்பையு மாலையு மிசைய வணிந்து மிசை, யிகலி யெழும்பரி மாவி னெழிற்றலை யெனமிளி ருஞ் சாலிக்,

குழுவி னிருந்தரளத் திரளுஞ்சுடர் குலவநிறைத் தொரு நின், கூர்விழ விற்குயர் மருத மெனப்பகர் கோனணி செய்தவெனச்,

செழுவள மல்கிய வரியையி னலர்மகள் செங்கோ செங் கீரை, திருமலை யெனுமொரு மலைவள ரிளமயில் செங் கோ செங்கீரை. (கூ)

ஆடுவ கேதனம் வனநிகரக் கிள ரஞ்சொ லிளங்கிளியா ரருகு கலாப மயிற்குலமான வருந்தரள ப்படலை,

யோடருவிக் கிணை யாயிலகப் பல வோளிய சூளிகைதா, மொளிர் சிகரம் பொரு வக்குல வெற்பென வோங்கிய பொன் மாட,

நீடு வளந்தரு மானகராகிய நேரிழை விண்ணேகா, நின்று நலந்தன் முகங்கொடு காண நிமிர்ந்தென வொன்றி யொளிர்,

சேடு பெறுந்தகை யரியை யுகந்தவள் செங்கோ செங்கீரை, திருமலை யெனு மொரு மலைவளரிளமயில் செங்கோ செங்கீரை. (கo)

இரண்டாவது செங்கீரைப் பருவம்

முற்றும்.

---

## மூன்றாவது
## தாலப்பருவம்.



ஓராயிரங் கணுடையானு முகாந்த முகிலென் றுளங்கருதி, யொழுகி வருபாற் றுறையினு லோர்ந்துதெளியப் பரந்த கருங்,

காரா விளங்கன் றுளிப்பொழியுங் கலசஞ் சுரகங்கையினோ டக், காணு மயங்கிக் கண்ணுதலுங் காணச் சடையைக் கடன் மடுத்துப்,

பேரார்மாலு மாலடையப் பெருகப்பெருகி நினைநெடுநாட்,
பிரிவா னேக்க வவாவொடு னைப் பெற்றாள் வரல்போ லெ
திர்ந்து வரும்,
வாராரரியக் குடியலர்மேன் மங்காய் தாலோ தாலே
லோ, மலர்மே லுறையுஞ் சதுமுகற்கோர் மாதா தா
லோ தாலேலோ. (க)

அன்று தமைத்தீம் புனல் விடுத்தாங் கருளால் வளர்த்த வத
ற்குதவி, யளிப்பானெண்ணி யெனப்பொழினீ ரருந்தா
வருங்கார் முகிலினின,
நன்றுவதிய வாசனமாய் நபமேலோங்கிப் பொழியுமது,
நனிசேர்தலி னப்பெயர்கொணதி நங்கைகனக மணி
யாரந்,
துன்றுதன மேலணிந்து மிடைத் துடியாய்ச் சிலம்பார்கா
லொடும்போய்த், தூயகுழை பூண் டுததி யெனுந் துணைவ
னுக மிகு மகிழ்வின்,
மன்றமணக்கு மரியை யலர் மங்காய் தாலோ தாலேலோ,
மலர்மே லுறையுஞ் சதுமுகற்கோர் மாதா தாலோ தாலே
லோ. (உ)

தன்பாற் றணந்து திருநெடுமா றலமான் றிருமானொடு மரு
வித், தயங்கும் படிகாணூஉ க்கலச சலதி தனிமைபொறு
தவன்றன்,
னன்பா லடைவ னெனல்போல நகவந் திலங்கு கோனேரி,
நாளும்படி வார் பவக் கடற்கோர் நாவா யெனலாய்ப் பரம்
புருட,

னின்பாற் கலப்பான் முத்தியெனு மெழிறுடு தவறனைக்கே ளா, விமையோர் நதியே முத லெவையு மெவர்க் கீதாங் கொலெனை வேங்கும்,
வன்பார் தொழுசீ ரரியை யலர் மங்காய் தாலோ தாலேலோ, மலர்மே லுறையுஞ் சதுமுகற் கோர் மாதா தாலோ தாலேலோ. (௩)

என்றேங் காழி யிறையவன்கை யேந்துந்தவள வலம்புரி போ, லெழில்சேர் கமல மலர்களொடு மெகினத்தினஞ் சேர் தடக்கரையி,
னன்றோங்கிய கற்பகங்கள்சுர நதியின் புனற்கு மிப்புனற்கு, நவைதீர் தரத்தை யறிந்திடுவா னற்காய்க் கலசக் காவடி கண்,
மென்றே டாங்கிச்செல விமையோர் மேம்பா டழியுமெனக் கலங்கி, விரைவின் மறைத்த கரும்படம்போன் மேகக் குழாந்தம் மேற்படிய,
மன்றேங் கரியக் குடியலர்மேன் மங்காய் தாலோ தாலேலோ, மலர்மே லுறையுஞ் சதுமுகற்கோர் மாதா தாலோ தாலேலோ. (௪)

பண்டுதனை வேரொடும் பிடுங்கிப் பாரங் கெடுத்தான் றலைக ளொரு, பத்துங் கணையாற் றரைவிழுத்தும் பரமனடியார் தமக்கிடமாய்க்,
கண்டுவடிவம் பலவெடுத்த கைலையெனலாய்ச் சோமனைத் தங், கண்டாங்கினவாய் விஞ்சையர்தாங் கணங்கொண் டுறைவெண் சுதைமாடங்,

கொண்ட துவசத் துகிலசைவாற் கூவியகை தனைநேராக்,
கொள்கை குறித்துப் பரிபவஞ்செய் குறியே காட்ட பற்பல்வள,
மண்மெரியக் குடியலர்மேன் மங்காய் தாலோ தாலேலோ,
மலர்மே லுறையுஞ் சதுமுகற்கோர் மாதா தாலோ தாலேலோ. (ரு)

திருப்பாற்கடல் வந்தெனத் திகழுஞ் சீரார் தடத்தாங் குடனடைந்த, சேடன் முடியின் மணிகொ லெனத் திகழுங் கமல மலர்மேவி,
விருப்பா லளிக ணீவிர்பெறும் விரைமென் குழலாள் மாலொடிவண், விழையா வுறையு மெனத்தூதர் விளம்பு மொழியினிசை பயிலத்,
தருக்கா லிவ்வா னந்தவுனை தந்தவதற்கோ ரரும்பரிசி, றருமாறெனத் தீந்துளியமதுத் தாரையொழுக்க வனுதினமு,
மருப்பா யரியக் குடியலர்மேன் மங்காய்தாலோ தாலேலோ, மலர்மேலுறையுஞ் சதுமுகற்கோர் மாதாதாலோ தாலேலோ. (சு)

வேறு.

வெங்கொலை வாள்வ லரக்கர் புரிந்தன மிக்கன வெப்பவமும், விண்ணவர் நல்வினை யும்பிடர் வல்வின வேகமொடுந்துதலாற்,
செங்கயல் போலும் விழிக்கை கயன் மகள் செப்பிய வாய்மொழியாற், றெயரத னுருயிர் சென்றதெனப் படர் தேவபிரா னுடனே,

மங்கு லுடன்செலு மின்னெனவுங் கட வாரணமோடு செலு
ம், வண்பிடி யென்னவு மானொடு செல்பிணை மானவுமுன்
றொடருஞ்,
சங்கை யிலாவள மல்கரியைத் திரு தாலோ தாலேலோ, சங்
கரனுக்கொர் பிதாமகி யானவ டாலோ தாலேலோ. (எ)

புட்கர மேவிய தன்கணவற்கொரு பூசுரன்மெய்ம் மொழியா
ற், பூவுலகிற் றொழு மாலைய மற்றது புந்தியினிற் கருதா,
வெட்கமுறு வுலகிற்க ணவற்குறு மேலிழி வரிவையர்தம்,
மேல தெனும் பரிசுன்னி னனித்தல மேன்மை யுணர்ந்
தனளாய்,
நட்புட னப்பழி தப்புற வாணி நயத்தவ மாரழலி, னுப்பனு
ருப்பல கொண் டுலகத்திடை நண்ணினள் போற்பணிலந்,
தட்கமலந் தொறும் வைகரியைத்திரு தாலோ தாலேலோ,
சங்கரனுக் கொர் பிதாமகி யானவ டாலோ தாலேலோ.
(அ)

கார்முக மின்ன லுடன் கலவா வரு காரெனவுந் தவமோர்,
கலைவுருவங் கொடு சென் றெனவுஞ் செல் கருஞ்சுடர்
ஞாயிறொடு,
மேர்முகமா நகரத்துள யாவு மிடர்க்கடல் மூழ்கிடவு, மெவ்
விடரும் பிரமானுபவர்க்கில வென்றுலக த்தெவரு,
நேர்முக மாவுண ரத்தொட ராவதி நேயமிகுங் களியுண், ணி
றைதர வாயில் கடக்குமு னவ்வன நெடிது கொ லென்ற
வடண்,

டார்முக மல்கிய குழலரியைத் திருதாலோ தாலேலோ, சங்
கரனுக் கொர் பிதாமகி யானவ டாலோ தாலேலோ. (௬)

வேங்கடமா லெவருக்கு மொர் நாயக விண்டுமுதன் மனையா,
மெல்லிய லாயவன் மார்பிடை வாச விருப்பின் மிகுந்
தொழிலா,
யாங்கவனுக்கதி கமைவள ரப்புக லஞ்செசா லிளங் கிளியே,
யம்புய மாமலரா லழகெய்திய வங்கர மென்றளிராய்,
பாங்குறு பங்கய வாதன மேவிய பைந்தொடி செங்கொடி
யே, பரிவு முதற்பல குணவகை யான்மிகு பாவைபுவிக்
கனையே,
தாங்கு வளம்பல மல்கரியைத் திரு தாலோ தாலேலோ,
சங்கரனுக்கொர் பிதாமகி யானவ டாலோ தாலேலோ(௰)

மூன்றாவது தாலப்பருவமுற்றும்.

---

## நான்காவது
## சப்பாணிப்பருவம்.

கமநெடுஞ் சூலக் கருங்கொண்டலின் குழாங் கடன்முகந்
தெழுவ தென்னக், கனமும் மதஞ்சோர வருகச புரந்
தரன் கரிணிகளுடன் புனல்படிஇச்,
சமையவற் புட னுடல்புரி போதுவெங் கரவுதாள்பற்ற வவ்வி
னந்தாங், தற்போத மெய்துகாற் பாசங்க ளென நீங்கு சம
யத்தொர் புகல் பெறுமட,

லமையக்க சிந்தோல மிட்டுமூலப் பொருட் கபயமென வர
ஞதியோ, ரலன்யானலன்யா னெனக் கைவிடவதி விரை
வினருளவெழு மருள்வாரியைத்,
தமனியச் சுட ராடை தொட் டீர்த்த செங்கைகொடு சப்
பாணி கொட்டியருளே, சலநிதி யெழுந்தரியை வளநக
ரமர்ந்ததிரு சப்பாணி கொட்டியருளே. (க)

சீரகத்தெழு கமலமலரொடு பரஞ்சோதி திருமார்பு குடிதுற
ந்து, தேசங்களுக்கெலா மதி தேசு பெற்றதுகொல் சென
கேச னகர மென்னப்,
பாரகத் தலமுகத் தொரு கோடி பரிதியொளி பாறக் கிளர்
ந்து வளர்நாட், பையரா வணை விட் டயோத்தியிற் றயரதப்
பார்த்திபபிரான் மகனெனக்,
காரகத்தெழு தாடகா தாடகேயரைக் கட்டுமுனி வேள்வி
காத்துக், கல்வடி வொழித் தகலிகைக் கரனிருஞ்சிலை
கரங்கொடு முறித்துநின்ற,
தாரகப் பிரமத்தி னங்கைபற் றங்கைகொடு சப்பாணி கொட்
டி யருளே, சலநிதி யெழுந்தரியை வளநக ரமர்ந்ததிரு சப்
பாணி கொட்டி யருளே. (உ)

முன்னொரு தினத்தி னுயர் தன்னிடை மிடைந்தவள முற்று
மலை யிட்டுழக்கி, முறையிற் கவர்ந்து வறுமைப்பட வினுஞ்
செய்ய முயல்கிலா தவனடி விழாத்,
துன்னிய திரைக்கர மெடுத்திரங்கிச் செய்ய துணையடிக் கமல
ம் வருடித், துய்யதாமிசை யெனச் சூழ்தரும் பாலின்வளர்
தொல்லை யம்புதியி னுப்பண்,

பன்னகாதிபன் மடியினிற் கண்வளரும் பரம பாவனன த
குகாரின், படலத் தெழுந்து சலியா தொளிசெய்மி
னெனும்படி யகல்கிலாதுவைகித்,
தன்னைய பாதவனசந் தைவரு செங்கைகொடு சப்பா
கொட்டியருளே, சலதிதி யெழுந்தரிவை வளநக ரமர்ந்
திரு சப்பாணி கொட்டியருளே. (ந

மூவெழு முறைப்புவியின் மன்னவரை வேரற முருக்கி
மழுப் படையினான், முனிவின னளித்தசிலை யோடுதவ
யோடு வல முழுதும் வலியின் முன்வாங்குந்,
தேவனை தந்தையுரை சொற்றூங்கி நின்பின் சிறந்தவி
வன் வரப்போய்த், தீயதொரு கானத்து வைகுநாட்சீ
சினந் தடர் கராதியர்களாம்,
பாவியர்கடற்படையின் வந்துபொர வங்கைப்பரித்த சி
யின் முகூர்த்தம், படுமுன் படச்செய்த பரிசுன்னி யவ
டற் படுகணையினுய செம்புண்,
டாபமற முலைவேது கொண்டொற்றி யணைகைகொடு சப்
ணி கொட்டி யருளே, சலதிதி யெழுந்தரிவை வளநக ரம
ந்ததிரு சப்பாணி கொட்டியருளே. (ச

முன்னமொரு கானிவி ருமதுபர முற்றுபெனை முன்னி
டொர் முதல்வர்க்கிடு, முறையின்முற் பவராசியிற் கொண்
டுவரும் முதலொழிய முழுதுமயர்வாற்,
பின்னுளவு நாடலா மேலினியோர்பிழை வராப் பெற்று
மின்வரினு மற்பப், பேதுறலை யிட்டொழியு மஞ்சலீ ரெ
பதிற் பீடுபெற் றுளிர பயமு,

மின்னிலையி னின்றெம தடிக்கென்று மெத்தொண்டு மினிதி
யற்றிய பினொருவா, திவ்வடி யடைந்துய்வி ரென்றுரைக்
குந் தகையி னிலகு வரதமு மிசைந்த,

தன்னிகர்செழுந் தாமரைத்துணைச் செங்கைகொடு சப்பாணி
கொட்டியருளே, சலநிதி யெழுந்தரியை வளநகரமர்ந்த
திரு சப்பாணி கொட்டியருளே. (ரு)

## வேறு.

சாது சனங்களை நாளு நலிந்தெழு தாழ்வுடை ராவணன்
வெந், தானையுடன்பட வவனிடு வெஞ்சிறை தனின்முனம்
வைகியநாள்,

வேதமினுந்தெரி யாதலைதாரக மெய்ப்பொருளா மவனால்,
விடவருதூத னெனுஞ்சுடர்வெய்ய விரோசனனிற்கலைறா,

லோதனுமானுதவுங் கதிர் மாமணி யொன்றிய வங் குலி
கொண், டோரரு நின்னொரு பொற்கலை மேவி யொளிக்கு
மொளிக் குழுவின்,

கோதறுமாமணி தந்த கரங்கொடு கொட்டுக சப்பாணி, குல
வரியக்குடி வளர்கனகக்கொடி கொட்டுகசப்பாணி. (சா)

கண்டுபடுங்குத லைச்சொன வின்றெழு கன்னியராயமுடன்,
கனகமுடிச்சன கேசன்மனைக்கணோர் கந்துகமாடியநாள்,

புண்டரிகக்கை பிழைத்தது வானதி பொங்கு சடைப் பெரு
மான், பொருசிலை நின்மனை யுள்ளதடிப் புகு போது
செகத் குருவாம்,

விண்டு வலாதவர் மேவி யெடுக்கரு வெய்ய வலத்ததனை, வேகமொ டங்கவன் மார்பணியக் கொளும் விரைகமழ் தாரிதெனக்,
கொண்டு மறித்தெறி தந்த கரங்கொடு கொட்டுக சப்பாணி, குலவரியக்குடி வளர்கனகக்கொடி கொட்டுகசப்பாணி. ()

கன்னவிலும் புய ராவணனாகிய காதக னின்முனூருக், கன்னக டோரம தாகிய வெம்மொழி கழறிய காலையிலே,
நின்னது செல்வமும் வெற்றியு முற்றவு நீடுமென் முல்லையெனு,நிகழு மனன்முனு மென்கண வன்முனு நீறுறு மீதினெனப்,

பன்னி யெனக்குலை குலையொடு மிப்பழி பாவி முகத் துறினும், பாவ மெனக்கரு தாவதன் முன்சில பகரவொர் திரணமொடாக்,
கொன்னவி லங்கவன் முன்னிடு கைக்கொடு கொட்டுக சப்பாணி, குலவரியக்குடி வளர் கனகக்கொடி கொட்டுக சப்பாணி. (அ)

புடை வளருந்தரு வைந்துடையானோர் புரந்தரன் முன்னொருகாற், பொங்கு சினத்தின னந்தண னனைன மொழி பொய்யறு வெவ்வுரையா,
லடையவு நந்தின நவநிதி யாயின வலைகடலிற் புகவே, யஞ்சியனந்தரம் விஞ்சு நிரப்பி லழுந்தி மயங்கினனாய்,
நடைபெறவங்கு தனக்கருளத்தனி நண்ணியநின்னடியா, நளினமலங்க வுவந்தபயத்தொடு நல்வரதங்களெனும்,

கொடையருளுங்கர தாமரசங்கொடு கொட்டுக சப்பாணி,
குலவரியக்குடி வளர்கனகக்கொடி கொட்டுக சப்பாணி.

தாரணியிற்பல தன்மம்வளர்ந்து தழைத்திடமாதவனுந், தா
னொருகண்ண னெனப்படிகொண்டு தயங்கியகாலையினீ,
சீரினுருக்குமணிப் பெயரோடு சிறந்தொரு வந்தணனாற்,
செய்ய மணந்தெரி வித்தவன் விரைவொடு சென்றரசக்
குழுவின்,
பேரணியிற் சுடரும் பரிசுற் றுணர் பெற்றிய யாயிலகிப், பெ
ருமன் வழங்குமு னம்புயவங்கை பிடித் தெவரும் புக
ழக்,
கூரணிதேரிடை வாவிய கைக்கொடு கொட்டுக சப்பாணி
குலவரியக்குடி வளர்கனகக்கொடி கொட்டுக சப்பாணி.()

நான்காவது சப்பாணிப்பருவம் முற்றும்.

---

ஐந்தாவது.

# முத்தப்பருவம்.



ஓரஞ்சலிகின் பாற்புரியி னேங்கும் பிரமாதியர் பதமு, மூய
ரக்கரமென் றுயர்ந்தவரா லுரைக்கும்பதமு மேவில்லாப்,
பேரம்பரம பதவிடும் பேரன்புட னீந்தென் னளிக்கப், பெற்
றேமென்றே நாணமுறப் பெறுஞ்சீருதார குணமுடை
யாய்,

க

பார்மல்கவையா முளங்கருதேம் பரிவாலொரு முத்தந்தரி னீ, பகருமவை முற்றும்பெற்ற பரிசேகண்டா யாதலி னின்,

மூரன்முறுவற் செங்கனிவாய் முத்தந்தருக முத்தமே, முறை யாரரியைத் திருவெவர்க்கு மூத்தாய்முத்தந் தருகவே. ()

எந்தவுலகங் களுக்கு மொரு விறையாம் வேங்க டாதிபற் கோ, ரிறையாந் தேவி யிடர்க்கடலி னிடைவார்ப் புரக்கும் விரதத்த,

சிந்துமமுத மழைபொழிவ செந்தாமரைக்குப் பாங்கினவா ஞ், செழுஞ்சீர்க்கடையா லுனதிருகண் சென்றெத்தலத் தே யாடுவகா,

ணந்தவிடம் பார்த்தக மகமென் றரும்பேர்நிதிய மனைத்து மன்றே, யடையாநிற்ப வெனினருளா லளிக்கப் பெறி னோர் முத்தெனக்கு,

முந்தை யவற்றுற் குறை யுளகொன் முத்தந் தருக முத்தமே, முறையா ரரியைத் திருவெவர்க்கு மூத்தாய் முத்தந் தருகவே, (உ)

பிறப்போ விறப்போ பேருலகிற் பிரமன்முதலார் பெரும் பதமோ, பேராநிலையி னித்தியராற் பேணுங் கலங்காத் திருநகரோ,

வறத்தான் மறத்தா னெவ்வுயிர்க்கு மளிப்பானுளனையினுந் திருமா, லருளின் வடிவுன் முகநோக்கி யாங்கிங்கிதத்தின் பரவசனாய்,

நிறத்தோ டலவுந் தகையனவ னிலையா தலினீ தொருமுத்த, நீதா னளிக்கின ருட்கடலி னிலைகாண் கிலமூழ் குவ நிலையே,
முறிப்போலிலகு கவினுடையாய் முத்தந்தருக முத்தமே, முறையா ரரியைத் திருவெவர்க்கு மூத்தாய் முத்தந் தருகவே. (௩)

மித்தைக் கிடமோ வெவ்வுயிர்க்கும் விளக்க மளிக்கும் பிரான்மருமம், மேவிச் சுடரும் வடிவொளியான் மிகவுந் துலக்குந் தேசுருவாய்,
நித்தத்தகைய பரம்பதமு நினையான் மானுபவ வுலகு, நியமத்தயனுர் பதமுதலா நீடந்தரத்தார் தமநிலையு,
மொத்திட் டளத்தற் கருமகிமை யுடையாய் சுபத்திற் கோர்சுபமே, யுனகட்கடையின பார்வை யொன்றே யுதவுமெனினீ யருளுதவு,
முத்தச் செய்கை மொழிபவர்யார் முத்தந்தருக முத்தமே, முறையா ரரியைத் திருவெவர்க்கு மூத்தாய் முத்தந் தருகவே. (௪)

அருகேவைகிச் சேதனர்தீங் கடையத்துலங்கா வகையின்சொ, லமுதின்மயக்கி வித்தகனு மவன்சீருளப்பா லுஞ்சிறிது,
மருவா தொழிய வெணியென்ன மருமத் திருந்தென் றென்று மருண், மல்கப்புரியுந் தாயுமையே மருவநுமது சரணமெனு,

மிருதாமரைக்கு ச்சரண்புகுவார்க் கெளிதேவிசும்போ டளை
கைதுத்தத், தெறிசீர்க் கடலி னிதியமுற்று மினிதி னடை
யா நின்றனவான்,
முருகார்முத்தி னைவெய்தா முத்தந்தருக முத்தமே,
முறையா ரரியைத் திரு வெவர்க்கு மூத்தாய் முத்தந்
தருகவே. (ரு)

**வேறு.**

தண்டுறை தோறலை வாரிதிவால்வளை சந்ததம் வந்தெதிருந்
தணிவில்புனற் பொருளைப்படு சங்கமசாகர முத்தமுடற்,
கொண்டணியிற்பெரு வணியலதியல கோகனகத் திருவாய்,
குலவொரு முத்தரு ளப்பெறு னித்திகழ் குவலயநற்
றிருவும்,
பண்டை மறைக்குல முடியவுரைப்பரு பரம பதத்திருவும்,
பாவைய ரிப்பிரி யாயவர் கைப்படு பான்மையவே யல
கொன்,
முண்டக மாமனை யாய்முனி யேயொரு முத்த மளித்தருளே
முறுவன் முகத்தனை யரியை மலர்க்கொடி முத்த மளித்
தருளே. (சு)

தந்தி வராக மருப்புட னிப்பிசலஞ்சல முத்தமெலாந், தரவ
ரினுங்கனி வாய்மலர் நின்றிழி தருமமுதத் தொடெழா,
வந்ததொர் முத்தென வுடலொ டுயிர்க்கித வகையருளா
வதலான், மகிதல மேலுடல் வெம்மையு மாறு வணம்
புரி யாதனவாந்,

தொந்த வினைப்படர் பிறவி யெனப்பெறு சோப மருங் கனல்
வாய்த், துய்யென லாயழி யச்செயி ஞோர்துணை சொலவி
சையா மகிமை,

முந்தையி னுயலர் மேலுறை மங்கையொர் முத்த மளித்தரு
ளே, முறுவன் முகத்தனை யரியை மலர்க்கொடி முத்த மளி
த்தருளே. (எ)

அயனைமுதற்சிறு தம்பவரைப்படு மரியவினைச்சனனத், தநி
நிவகக்கொ ரெலைக்குறியாமுன தருளையடுத்தவரே,

நயகுசலக்குழு முழுதுமடுத்தெழு நரகவழித்துணையா, நவை
யைவிடுத்திசை துரிதவகைத்திற னுறுக லறத்துறவா,

மயலெ லெவர்க்கு முண் மிகவும் விளைத்துடன் மருவுமவித்
தையையும், வரைவருவப்புட னிஃதருளிற்சொலு மகிமை
யெமக்கெளிதே,

முயலின்மதித்திரு முகமினிடைத்திரு முத்தமளித்தருளே,
முறுவன் முகத்தனை யரியைமலர்க்கொடி முத்தமளித்
தருளே. (அ)

மறையின் முடிக்கொரு திலதமெனச்சொலுன் மகிழ்நனை
நற்பரமாய், மகியினிடைச்சிலர் பகர்வருஜைப்பலர் மதியி
ன்மதித் தறைவார்,

தறையின்மிசைக்கிளர் வொடுமெதலத்திழி தகையர்தமக்கை
விட, மருமெமையத்தகை வுளநினையற்க தணத்தலொழித்
தெவனு,

முறையுறுமக்கடி மையினமெமக்கிரு வுமையொழியக்கட
ளுளவிலைமெய்த்திற னிதெனமனக்கொடு முவமைசொ
ற்கரியாய்,

முறிகனகச்சிலை புரையுறுதற்றிரு முத்தமளித்தருளே, மு
வன்முகத்தனை யரியைமலர்க்கொடி முத்தமளித்தருளே.

தனமுதவுஞ்சுதர் தமையுதவுங்கன தனமடவாருதவுந், தன
யுதவும்பொரு புரையுதவுஞ்சுர தருவுலகுந் தருமொண்,

வனசனருந்திரு நகரொடுதொன்றுகை வலியமுநல்கிடுமி
வகையவெலாநர கெனவொளியான்மிக வருசுகவாரி
யாற்,

கனகவிஞ்ஞிறை பரமமெனும்பர கதியுதவுந்தகையாற், கன
லும் வந்ததொர் நனவிலும்யாமிவை கருதலமிங்கிதை

முனின மணங்கர சிஃதமை யுந்திரு முத்த மளித்தருளே,
முறுவன்முகத்தனை யரியைமலர்க்கொடிமுத்தமளித்தருளே

ஐந்தாவது முத்தப்பருவ முற்றும்.

---

ஆறாவது

# வருகைப்பருவம்.

---

மக்கள்வேண்டிற் றினிதுதவு மாதாவெனலாய்ப் பரமப
வாழ்வுவேண்டி ஞன்மவனு பவமேவேண்டின் மாம
ரோான்,

றக்கவுலகந் தான்வேண்டின் சயிலக் கயிலை பெறவேண்டின்,
றண்கற்பகத்தி னிழல்வேண்டின் றரையோர் குடையி
னிழலாளு,
பக்கபதமே பெறவேண்டின் வேலைப்புவியின் மானிடர்க்கு,
விருப்பி னளிக்கும் பாங்குமுடை விமலா யரியை யலர்மங்
காய்,
க்கும் பனிவெண் மதிமுகத்தாய் கமலாய் வருக வருகவே,
கல்லார்மனப் பாறையின் விளையாக் கரும்பே வருக வரு
கவே. (க)

சனவற்போ லத்தனுக்கே யியல்பாங் கடுஞ்சொற் சினமனு
கா, தெழுதாய்க் குரிந்தா மின்புடைமை யினியமொழி
யே மிகவுமிகுந்,
தாசுபுரிந்தா ரென்னினுமென் னவர்செய்தீமை யெனத்த
ழுவி, யவன்பான்மொழியின ஞதரவான கற்றுவுரையின்
வல்லபமு,
ழுசியிவைகொண் டுனையடைய முயல்வார்தமையாங் கவன
டியின், முன்னர்விடுத்தே யொருசிறிது முனியாதணைக்க
வினிதிணக்குங்,
காசில்புருட காரவியற் கமலாயரியைத் திருவருக, கல்லார்
மனப் பாறையின்விளையாக் கரும்பேவருக வருகவே. (உ)

பொற்றாணூரமுங் கனகனூர ப்பொருப்புமளி நாணியைச்
சினவும், பொங்குதழுற்கண் ணுதலுடைச்சிம் புள்ளும்பிள
வோரிரண்டின்விழ,

முற்றமுனியு முடங்குளைய முரட்போர்ச்சிய முன்னனாக, முதிரக்கலங்கு மறையவனே முதலாமமரர் வெரூஉக்கா ணாப்,
பற்றியெழுகோ பானலம்போய்ப் பாறவிண்டு பதத்தனா கிப், பாங்காங் கருணைக் கண்ணம்பும் பகர்வினுதலு மிடை யினுமாய்க்,
கற்றார்பரவின் சொன்மழைபெய் காரேயரியைத் திருவருக, கல்லார் மனப் பாறையின் விளையாக் கரும்பே வருக வரு கவே. (௩)

உலகமுழுதோர் கோனடவு மொருவன்றனக்கு மவனருளை, யுறுகைக்குழலுஞ் சேதனர்க்கு மொன்றக்கடக வடிவா னாய்,
நலவிந்தனமின் றேலனல்போ னண்ணுதுணையாங் கவனில கான், ஞாலத்தொளியாற் கதிரவன்போ னண்ணியுனையே நகுகின்றான்,
பலருமறிவ ரிஃதெனினும் படியின்மடவார் பதிகளிடைப், படிவான்காட்டும் பரிசெனவே பற்றிப்பணியுந் தகையு டையாய்,
கலியென்பதுதான் கண்டரியாக் கவின்சேரரியைத் திருவ ருக, கல்லார்மனப் பாறையின்விளையாக் கரும்பேவருக வருகவே. (௪)

தாயேநினது தனிக்கணவன் றரையிற் கொடிய தொழில் புரியுஞ், சனர்பாலிதமே புரியவெண்ணித் தனையர்தமைத் தந்தையர்போல,

வாயாவொருகாற் சினமுளத்தே மருவியெழுகா லிடைய
ணுகி, மதியீதெவன்கொ றீமையிலார் மண்மீதெவரே யுள
ரென்ன,
வாயாவுசித வுபாயவுரை யதனுன்மாற்றி யவற்குசித. மனு
கூலர்களாம் வகைபுரியு மமுதமொழியின் வருடத்தாய்,
காயாவருளின் வடிவான கமலாயரியைத் திருவருக, கல்லா
ர்மனப் பாறையின்விளையாக் கரும்பேவருக வருகவே. ()

எல்லாமுனைவந் தடிவணங்கு மிறைவியொரு தாணுய்த் தனை
யர்க், கிடர்வந் தணுகி லாங்கவர்க்கொண் டிறைபா லணுகு
மன்னையெனப்,
பல்லா மவைபின் வரப்பெருமான் பதமே பணியா நவிலுகிற்
பாய், பகர்தற் கரிய பலபொருளுன் பாலே படிய வவை
படிவாய்,
பொல்லா வினையா லவன்வெறுக்கும் பொய்யோ மெமையும
வன்பொறுக்கப், புரிவாயெனுஞ் சேதனர்க்காட்டிப் புரி
வின்மொழியாற் காக்குவிப்பாய்,
கல்லாதவருங் கற்றவருங் கருதுமரியைத் திருவருக, கரு
மான்மகிழு மொருமானின் கன்றேவருக வருகவே. (௬)

வண்டுமதுவுண் டுழறுளப வனத்தேயுலவு பொற்கிளியே,
வனச மலரின் மிசையெழுந்து வண்ட ருகவா மதுப்
பெருக்கே,
குண்டுபடும்பா லாழிவருங் குளிர்செம்பவளக் கொழுங்கொ
டியே, கொண்டலுருவன் புயவரையிற் குலாவுங்கலாப
மயிற்பேடே,

பண்டைமனுவின் வழியரசர் பாங்காமனைக்கோர் மணிவிள
க்கே, பகரு சனகர் குலோததியிற் பரிமித் தெழுமோ
கற்பகமே,

கண்டமறைச் சாகையின்முதிருங் கனியேயரிவைத் திருவரு
க,கருமான் மகிழு மொருமானின் கன்றேவருக வருகவே

சடையின் முடியு மரவுரியுந் தனுவும்பூவைப் பூவைநிகர்
தனுவுமுனிவர் புன்கணையுங் கணையுமேந்திக் கருமுகில்
போற்,

படரும்வனத்தே படருமெங்கள் பரஞ்சோதியின்பின் மின
ன்மினல்போற், பழியிலிளையோ னுனைத்தொடரப் பரிவிற்
றொடர்ந்தா யெனப்பகர்வார்,

குடிலைப்பொருளு மித்தகையே கொண்மினெனவிப் பூதலத்
தோர், குறித்துமகிழக் காட்டுகிற்குங் கொள்கையென
வே குறிக்கின்றாங்,

கடையின்மறைதே டரியமொழிக் கரும்பேயரிவைத் திரு
வருக, கருமான் மகிழு மொருமானின் கன்றே வருக
வருகவே. (அ)

வேறு.

சனகர்பெரும னனகயாக தலமெழுந்த முதல்வியே
தாரகேச னிகரும்வதனி தாரகேசனடிதொடக்,
கனககமலவங்கைபற்று கன்னிவிமலை கமலையே,
காசிலாத தயரதற்கோர் கவின்மிகுந்த மருகியாய்,
வனநடந்து பிரிகலாத வண்ணமிங்குகாட்டினுய்,
மாசின்முனிவ னங்கைபூட்டு மணிபொனுடைசூடினுய்,

யனைவர்பாவ மிரியுமரியை யலரின்மங்கை வருகவே,
யகரவுருவனைத்துலக்கு மன்னைவருகவருகவே. (௯)

கஞ்சவஞ்ச நூபுரங்கள் கால்சி லம்பவருகவே
கலைசுமந்த கொடிமருங்கல் காணவன்னை வருகவே
விஞ்சுமங்க லங்கழுத்தின் மீதிலாட வருகவே
விளைநிலாவின் வாய்மலர்க்கண் வெணகையாட வருகவே
பிஞ்சின்மதியின் முத்தின்வேர்பிதுங்கநுதலின்வருகவே
பெய்முகிற்சுருண் முகம்பிறங்கிவீழவருகவே
யஞ்சிவந்தடைந்த வெம்மையருள வேண்டிவருகவே
யகரவுருவனைத்துலக்கு மன்னைவருகவருகவே. (௧௦)

ஆறுவது வருகைப்பருவம் முற்றும்.

---

ஏழாவது.

# அம்புலிப்பருவம்.

கமலத்தி னிடைவந் தெழுந்துலகெலா முதவுகாரணன் முத
ற்றேவருங், கருதற்கு முடியாத பிரமத்தி னிலைமையுணர்
கடவுண்முனிவரர் குழாமுஞ்,
சமயக் கடைக்கணருள் பெற்றிலா ரினுமம்ம சரதமிது தா
னெனற்குத், தனிமைப் பரஞ்சோதி யுலகெய்திலாத வித்
தகைமை யதுவே கரியதாம்,

விமலர்க்கு நிதியாகு மெமதம்மை வாவென விரும்பி நிற்
வுகின்றாள், விரைவுட னெழுந்தி வட னுட னுடவெண்ண
னின் மிக்கபாவனர்க ளிலரா,
மமையக்கை வசமதாய் விடுமிரு விபூதியிங் கம்புலீ யாடவ
வே, யரியைநகர் குடிகொண்டவலர்மீது மங்கையுட னட
புலீ யாடவாவே. (க

சீதவன மாலைபுனை மாலிதய மகிழுவரு செய்யதகை பெ
றிடுதலாற், சிறந்தனப மோடுமிசை யாசையுற வாழலா
றேறிய களங்க முறலான்,
மாதகைய வத்ரியம் பகபிதா மகனுக மருவலாற் கட லெ
தலால், வண்கலைக ளெட்டெட் டுடன்வளர்தலா லெவை
மண்மிசை வளர்த்துவரலா,
னீதமுறு செங்கமல மிசைபட விளங்கலா னிலவினைவிடு
துதவலா, னீடுகண் மரையோடு பகைகொண் டிருத்தலா
னீ யிவளொ டொத்துலவுவா,
யாதலா லண்டபகி ரண்டமாதா விவளோடம்புலீ யாடவ
வே, யரியைநகர் குடிகொண்ட வலர்மீது மங்கையுட னம்
புலீயாடவாவே. (உ)

சிந்துந் திரைப்புணரி யிற்றனுடன் வந்ததொரு செய்கை
மனக்குறித்தோ, தேவர்க்கெலா மன்னையாகலிற் சேயெ
னச் சிந்தித்ததோ தனிறையுள்,
வந்ததென வுன்னியோ வயனர் படைப்பினின் மகன்மக
னெனக்கொண்டதோ, மகன்மகன் சென்னியில் வாழ்
யென் றெண்ணியோ வாவெனக் கூவுகின்றாள்,

ந்ததமு மன்பர்மறு வெல்லாந் துடைத்துதவு தாயருட் கிட
மதானுய், தவமே திழைத்தனைகொல் குருபாத கத்தினெ
டு தருமாசு மொழிவுசெய்யு,
ந்தரம தின்றுகாண் வந்துள துனக்கம்ம வம்புலீ யாடவா
வே, யரியைநகர் குடிகொண்ட வலர்மீது மங்கையுட னம்
புலீ யாடவாவே. (௩)

ருமலர் மிசைத்தோன்று பிரமாதி கட்குமிடர் வருபொ
ழுதி னபயவரத, மலரா லளிக்குமா றன்றியொரு புகன்
மொழியும் வாய்மலர்கிலாள் கூவுமாற்,
பெருகியமு தொழுகுமுன துடன்முழுதும் வெளிறிமிகு பெ
ருமித மிழந்துவற்றிப், பிரியாத மறுவினெடு மொழுகு
கண் பனிசோர்வு பெற்றுமதி கூழமுதுசெய்,
தொருகலையு மில்லா திவ்வுலகெலா மலைகின்ற துறுசெயலை
யுன்னியென்னம், முட்னுதித்தவனிந்த வுறுகணடை வா
னிதற் கொப்பதொர் பழிப்பெவர்க்கு,
ருளுதவு நந்தமக் கிலையென் றழைப்பதே யம்புலீ யாடவா
வே, யரியைநகர் குடிகொண்ட வலர்மீது மங்கையுட னம்
புலீ யாடவாவே. (௪)

ழுவுற்ற கையிற் செபத்தாவடங் கொண்டு மதிலிலங்கை
யர் பிரானை, வாட்டிய திறற்முரகப் பிரம சிந்தனை மகான்
சடில மகுடமீது,
ழுதற விருக்கின்ற பரிசுதனை யுன்னியோ பலகா லழைத்
திடவுநீ, படர்கிலா யப்பெருமை யெவனுற்ற வெனி
னெம் பரம்புருட னிதயகமலத்,

தெழலுற்ற தன்றியன் றெம்பிராட்டியினெடு மினியபா லுத
திவந்த, வியல்பென வறிந்திலா யிஃதென்ன கெடுமதி
கொ லெய்திற்றுனக் கின்றுகா,
ணழிவிலா வாயுளுஞ் செல்வமு மெய்தலா மம்புலீ யாடவா
வே, யரிநகர் குடிகொண்ட வலர்மீது மங்கையுட னம்
புலீ யாடவாவே. (ரு)

வருவபக்கங்க ளொரிரண்டினும் வளர்ந்துகுறைவா யிவணி
தம் வளர்குவாண், மறுவுடற் படவாழ்தி நீயிவட னடிய
வரு மறுவிலாரக் களங்க,
மெரியரவின் வாய்ப்பட்டுமெலிதிநீ யீசனெடு மிவளிடங்
கொடு மகிழுமா, லிங்குசேடப் பொருளிலொன்று நீயிவ
ளெவ்வுயிர்க்கு மொருசேடிகண்டா,
யொருகலையு மின்றிபோடித் திரிதிநீ யிவளுமொளிர் நாய
கத் தரசிகா, ணொருவாது நாளுங் கொலைத்தொழி லியற்
றுபவ னுடனுறைதி யிவள் சாதுவா,
மரியசங்கத் துறைவளாதலா னிற்கதிகை யம்புலீ யாடவா
வே, யரிநகர் குடிகொண்ட வலர்மீது மங்கையுட
னம்புலீ யாடவாவே. (சு)

அகில வுலகங்களுக் கபயங் கொடுத்தருளு மங்கைகொடு
நின்னையன்னே, யம்புலீ வாவென வழைத்திடவு மவ
மதித் தகல்வான மோடுகின்றாய்,
தகவுணரி லண்டபகி ரண்டங்கண் முழுதுண்ட தனிமுதற்
கடிமையானோந், தடைபடற் குளமல மெனக்கொண்ட
தன்மைகொ றனிப்போக வடிவுகொண்டு,

நகுமின்னு மொளியுமென வொன்றாய பேதமாய் நற்புருட
காரியாகி, நாளழிவிலா வவனொ டேகசேடியு மானநல
மன்றிவே றில்லைகா,
ணகரவாசக னிவண்முகங்கோணி னருள்கலா னம்புலீ
யாடவாவே, யரியைநகர் குடிகொண்ட வலர்மீது மங்கை
யுட னம்புலீ யாடவாவே. (எ)

என்றுந் தனைப்பெற்ற தாய்வயிறு பொங்கிடச் செய்தினிய
மதுவொழுக்கு, மின்பந் தருந்தனது வீடெலா மடைபட
வியற்றியிடர் பலபுரிந்து,
துன்றுலகபாலனம் விரும்பியவ தாரஞ்செய் துணையிலர் தம
க்கொர் துணையாய்த், தோன்றித் தணந்துறையும் ஞான்
றிற் கனற்குநிகர் சுடர்தந்து கனலுவித்து,
மன்றவபராதியாய் நின்றயாமெவனெய்து மாறென மதித்த
னை கொலாம், வாவெனவும் வாராது நிற்றியெவ்வுலகுக்கு
மாதாவிவட்கமதிதா,
னன்றுசெய் பிழைசெய்யி னன்னைநெஞ் சழல்வளோ வம்
புலீ யாடவாவே, யரியை நகர் குடிகொண்ட வலர்மீது
மங்கையுட னம்புலீ யாடவாவே. (அ)

சேதனாசேதனர்க ளெப்பெரிய தீமைவகை செய்யினும்
முனிவு சிந்தை, சிறிதுஞ்செயா ளெங்ஙனெனிலிலங் கே
சனிடு சிறையிடை யிருந்தகாலைத்,
தூதுகொடு கடறாவி வந்துதன துயிரினொடு சுடராழி தந்து
நின்ற, தூயவனுமனுநின் முன்னித் தீயரைத் தலைதுமித்
திடுவனென்று தனலப்,

பாதகவரக்கியர் நடுங்கிச்சரண்புகப் பரிவினொடு மய்யதீங்கு
ப், பலபுரிந் தபராத மென்னி ழைத்தனர்களப் பதகனிடு
தொழிலலாலென்,

ருத ரமளித்தருளு மம்மையிவ ளாதலா லம்புலீ யாடவாவே,
யரியைநகர் குடிகொண்ட வலர்மீது மங்கையுட னம்புலீ
யாடவாவே. (௯)

எவ்வெவர்க ளெத்தீங்கு செய்யினுஞ் சிறிதுமுணி வெண்ணி
லாக் கருணைவடிவா, ளெனவெண்ணிநுய் கொலிவளொடு
பராமுகமா யிருத்தலைச் செகதீசனுஞ்,

செவ்விமுகில் போலும்பிரான் றிருவுளத் துணர்தல் செய்யு
மேற் சினமெதென்னுந், தீயவியும் வகைசெய்ய வல்லார்க
ளெந்தச் செகத்தினு மிலாரொரரவுணன்,

வெய்யதொழில் வாயசத் துருவனுய் வந்திடர் விளைக்கவரு
ளுதியர்கள்கை, விடவந்து சரணமே சரணமென வடிமீது
வீழவொரு புல்லின்வெற்றி,

யவ்வொருவ னன்றுகொண் டதுமறிதி யானீயு மம்புலீ யா
டவாவே, யரியைநகர் குடிகொண்ட வலர்மீது மங்கையுட
னம்புலீ யாடவாவே. (௧0)

ஏழாவது அம்புலிப்பருவ முற்றும்.

---

## எட்டாவது
# அம்மானைப்பருவம்.

எங்குமுவ மிக்குமுன தங்கவெழி லானகட லிடையெழுந்
திலகுகொப்பூ, ழிவையெனவு மெவ்வெ வுலகத்தருமுனை
ச் சரண மெய்திலர்க ளாயினவர்தஞ்,

சங்கையில வுற்பத்தி நாசங்க ளிவ்வாறு தானெனவு முட
னுதித்த, தவளக் கடாக்களிறு தனியுணப் பேரன்பு தழை
யத் திரட்டிநல்கும்,
பொங்குதிரை க்குழா மென்னவுந் தூயநீர்ப் பொன்னி முத
லான நதியைப், பூசலிட வம்மெனலி ஞெசையிடு தேனதி
பொருங்கரை தகர்த்தொழுகுசீ,
ரங்கணரி யக்குடியி னிற்குடிகொ ளலர்மங்கை யம்மானை
யாடியருளே, யாதவற் சோதியென மாதவற் சேருமவ
ளம்மானை யாடியருளே. (க)
வெண்ணிலா வொழுகுசுடர் முத்தம் பதித்தனவு மேதகுஞ்
செய்யமணியால், விராயவும் படர்நீல மணியா லியன்ற
னவு மீதெழுவெறிந் தாடுகால்,
வண்ணமுடை யோகாசனத் தூருவ மாமூல வண்பகுதி நின்
றுநின்முன், மகிழ்வுட னெழுந்துதொந் தங்களிடு மும்
மைபெறுவண்குணத் தியல்புகாட்டக்,
கண்ணகன் றில்குதட மெனுமங்கை யுந்திரைக ளாங்கரமெ
டுத் தொழிவிலாக், கனவொளி மிருந்தவின நவமணி யெ
னுந்திரள் கழுங்காட மல்குசீர்சா,
லண்ணலரி யக்குடியி னண்ணுமலர் மேன்மங்கை யம்மானை
யாடியருளே, யாதவற் சோதியென மாதவற் சேருமவ
ளம்மானை யாடியருளே. (உ)
புலன்கலங்கிப் பொறிகலங்கிப் பொரும்பஞ்ச பூதங்களுங்
கலங்கிப், பொய்யிலா வுயிர்முற்று முடலழி தரச்செய்ய
பொற்பணிக டம்முடிவினி,

னலம்படர முன்னுருவ மேயெய்து தகையவென நணுகும
ணுவின் வடிவவாய், நானிலத் துறுகம்மி கைம்மெழுகி னு
றுசுவண நற்பிதிர் நலம்பெறத்தோல்,

லுலம்படுந் தன்மாயையிற்படிய வருவதா மோர்பகலிவ் வண்
டகோடி, யுறுநமக் கிவ்வா றெனச்சீவ ராசியிடை யுனை
யெணு மவர்க்காட்டல்போ,

லலங்குபொன் மணிமாட மல்குமரி யைக்கரசி யம்மானை
யாடியருளே, யாதவற் சோதியென மாதவற் சேருமவ
ளம்மானை யாடியருளே. (ங)

சந்ததமு மானந்த வெள்ளப் புதுப்புணரி தனின்முழுகி யுண்
ண வுலீணச், சற்றுந் தெவிட்டாது நீநித முவப்புறுந்
தகையவடிமைக் கினியரா,

நந்துதலில் நித்தியர் தமக்கலா லெந்தெந்த ஞானியர்களுந்
தம்முளுந், நலமொன்று முணராது நல்லெழினி யிட்
டென நடுக்கிடந் துறமறைக்கும்,

பந்தமுடை யம்மாயை யிடைநின்று மாதிப் படைப்பிலிவ்
வண்டகோடி, பதுமைநின் சங்கற்ப மாத்திரத் தலைகடற்
படுபுற்புதத்தி னெழல்போ,

லந்தரத் தோடுபுவி புகழரியை யலர்மங்கை யம்மானை யாடி
யருளே, யம்மானை யீதியென வம்மானை யாடினவ ளம்
மானை யாடியருளே. (ச)

மணிநீல வம்மானை முன்செலப் பின்செல்லும் வழுவின்முத்
தம்மானைதாம், வல்லிருளி னைச்சீறி வெண்டிங்கண் மிசை
யோடு வண்ணமிதெனச் செமணியாற்,

றிணிநீர வுடனெழுவ வவ்விருண் மதிப்பாற் சினந்தெழு கதிர்க்குநிகரச், சென்றுநின் முன்மீள்வ தம்பகைமை யம்மூவர் செப்பிடற் கெய்தல்காட்டத்,
தணிவிலா வளமல்கு தண்புனற் றடநீர தலநின்ற வுமருமரனின், றம்பால் விழுந்தன கனித்திரளை வீசித் தனிக்கரனின் வீசியென்று,
மணிநிலா வாவிகளு மாடரியை யலர்மங்கை யம்மானை யாடியருளே, யம்மானை யீதியென வம்மானை யாடினவளம்மானை யாடியருளே. (ரு)

வேறு.

கைப்பட நீரச நாறுத லிற்பொலி கமழ்குழல் வண்டினமுங், காதளவோடு கண்வண்டு மெழுந்து கலந்து மகிழ்ந்தாட,
வொப்பறு கைம்மலர் மேவிய சங்கமு முன்னடி காணவரு, மும்பர் மடந்தையர் சங்கமு நின்றன வொன்றி யொலித்தாடச்,
செப்பெனலாந் தன மேனகையுந் திகழ் திருமுக மேனகையுஞ், சென்றொளி யாடநுண் மின்னிடை யும்படி சிறுகிடை தானாட,
வப்பிடையுங் கணி சீரரியைத்திரு வாடுக வம்மனையே, யம்மனை மன்னுயிர் மாலவர் தம்மனை யாடுக வம்மனையே.(சு)

செம்மணி யிட்டொளி கொண்டன பின்பு செலச்செல முன்புசெலச், சென்று கரத்திடை வந்து புகுஞ்செழு நீலநிறத்தன தாம்,

பொம்ம லிளங்கதி ராதவனலடர் போதுநடுங்கியவன், பொ
ற்புறு நன்மனை வாய்மறை வந்துபுகுங் கருளின் றிரள்
போ,
லெம்மை யினிப்பிறவிக் கடலிட்டிட ரெய்தி வருந்துகிலா,
தின்னருள் கொண்டரு முத்தி யெனுங்கரை யெய்த விடு
த்தருளு,
மம்மை யரிப்பிரியா யரியைத்திரு வாடுக வம்மனையே, யம்
மனை மன்னுயிர் மாலவர் தம்மனை யாடுக வம்மனையே ()
வந்து வணங்கின ரந்தரியுங் கலைவாணியுமே முதல்வான், மங்
கையர்தாமொ ரிமைக்குமு னுயிரம் வானிடை யாயிரமா
ய்ச்,
சந்த முறும்ப னிறத்தன கண்டு தயங்கி மயங்கினராய்ச், சா
லமெனும் பெருவிஞ்சையியற்றின டாரணியின் கணெ
விந்தைகொ லீதொரு சின்னெடி யிற்பல மேம்படு மண்ட
மெலாம், விரிய விடுத்திடு மன்னையிவட்கு மிகுந்தொழி
லோவிலென,
வந்தர மேலெழு மிசையரியைத்திரு வாடுக வம்மனையே, யம்
மனை மன்னுயிர் மாலவர் தம்மனை யாடுக வம்மனையே. ()
தாமரை நின்றொரு தாமரை மேல்விழு தாழ்சிறை யோதிம
மே, தாமெனலாய்மணி முத்தி னிழைத்தொளி தந்தன
மீதெழுகாற்,
றேமுதிர்பாலண வின்னடிசிற்றிர டிரளையெனக் கருதாச், செ
ன்று விழுங்களி வண்டென நின்னிரு செங்கணெளிட்
படலாற்,

காமருபேடென நின்குழல் வண்டு கலந்தன நாணமுருக்,
கருமணி யூடுபதித்தன வென்று கருத்து மதித்தோட,
வாமதுவின் பொழி லரியைநகர்த்திரு வாடுக வம்மனையே,
யம்மனை மன்னுயிர் மாலவர் தம்மனை யாடுக வம்மனையே.

செம்மணி யம்மனை பின்பு செலச்சுடர் செழுமுத் தம்மனை
தாஞ், சென்றுமு னேடுவ பிறர்மனை வவ்விய செய்கைய
வம்மதியந்,

தம்மனை வந்தெழு தகைமை குறித்தெழு தக்கசினங் கது
வாத், தடியக்கடிது தொடர்ந்துசெ லாதபர் தமை யொத்
திட வொழுகு,

மும்மை மதம் பொழியுங்கர குஞ்சர முன்ன ரளித்தருளு,
மூல முதற்பொரு ளானவனுக் கொர்முதற் றிருநாயகியா,
யம்மையு மிம்மையு மருளரியைத்திரு வாடுக வம்மனையே,
யம்மனை மன்னுயிர் மாலவர் தம்மனை யாடுக வம்மனையே.

எட்டாவது அம்மானைப்பருவ முற்றும்.

---

## ஒன்பதாவது
# நீராடற்பருவம்.

தேனுண்டெ ழுந்திசைப யின்றனுதினந் துயில்செய் செறி
வண்டர் குழலொடலையச், செய்யசிந் தூரதிலக மழியவா
ணுதன்மருவி றிகழ்பிறையின் வடிவுகாட்ட,

மீனுண்ட கண்சிவப் பேறவில விதழ்வெண்மை மேயவிரு
தாமரைத்தாண், மீதிட்டு வளர்நூபுரங் கலிப்பக் கனக
மின் பிதிர்படர்ந்த தனமேற்,

கானுண்டநாவி யின்களியழி தரச்சிறுகு கைப் பிடியினுண்
ணிடையின் வாய்க், கலைநெகிழ வெம்மடிக ளுருவென்ற
தண்புனற் கணவனொடு புணர்தல்காட்டி,
வானுண் டெழுந்தலை புரண்டுவரு கோனேரி வந்துபுன லா
டியருளே, வனசத் தொழிந்தரியை நகரத் துவந்ததிரு
மங்கைபுன லாடியருளே. (க)

செந்திலக மிட்டிலகு செம்பிறையு மஞ்சனந் தீட்டியொளிர்
வெய்யவிடமுந், தேமாங் குயிற்கினிமை கற்பித்தருந் து
வர் செயப்படு வளத்தி னிட்ட,
முந்தமுது மம்பொன்வா ரிட்டணி கருப்பூர முதுசே றளா
ய்க் கனத்த, முலையயிந் திரவெள்ளை யானையுங் காஞ்சி யெ
னு மூதணிதரித்து னுண்மைத்,
தந்தினு நடங்கிய விடைக்கறப வல்லியொடு தான்றுலங்கிக்
கலசமாந், தண்வாரி யிடைவந் தெழுந்தொளிர நின்ற
தொரு தகையிதென வோதமெல்ல,
வந்தன மெனச்சாயல் மயிலெனக் கோனேரி வந்துபுன லா
டியருளே, வனசத் தொழிந்தரியை நகரத் துவந்ததிரு
மங்கைபுனல் லாடியருளே. (உ)

வெண்ணிலா வீசித் தணந்தார்க்கு வெப்பமொடு மேவிச்
சிறந்த மடவார், மிக்கமகிழ் வெய்திடப் பேரின்ப முந்தந்
து மிசைவரு கலைத் திங்களு,
மண்ணிலா விருளுந்தம் வெம்பகைமை நடுவர்பால் வந்து
பகர்கின்ற வென்ன, மலைவல்லி யொடுகலையின் மடவல்லி
யும்பாங்கர் மருவினர் வணங்கி நிலமேற்,

புண்ணிய முடன்கடிய தீவினையு நிற்புகல் புகுந்தவரி னின்று
மவர்பாற், பூணினியர் பாற்பகைவர் பாலெய்த வருளு
ெனடு புனன்மூழ்கி நீலதவள,
வண்ணவிரு வல்லியின் மருங்கெழவொர் பொற்கொடியின்
வந்துபுன லாடியருளே, வனசத் தொழிந்தரியை நகர
துவந்ததிரு மங்கைபுன லாடியருளே. (௩)

நலம்பொலி சிலம்பொலியி னம்போருகத் தளிம நண்ணு
மின மெனமதித்து, களிைத்து வந்தமட நடையோதி மங்
கலையி னங்கையென வடிகள் பற்றிச்,
சலந்தலை மிகத்திருநி னடைகண்டு நாணிெனடு தலைகவிழ
வும் வரால்க, டடந்தாணி யெனலாய நின்கணைக் காலி
னிணை தழுவிச் சமழ்ப் பெய்தவு,
மலம்புபுன னேமியம் புள்ளுனது தேகவெழி லானநதியி
டையெழுந்த, வணியிலகு கொப்பூழ்க ளிவையெனச் சுட
ர்கொங்கை யணவியிணை பெறுகளாது,
வலங்கெட வெரூஉக்கொண்டு மாழ்கவுங் கோனேரி வந்து
புன லாடியருளே, வனசத் தொழிந்தரியை நகரத் துவந்த
திரு மங்கைபுன லாடியருளே. (ச)

கலைமா தொருத்தியிரு கைக்கொண்ட வெண்ணிலாக் கன
மணி யிழைத்ததவளக், கவிெனன்று சிவிறிச் செழுங் கற்
புரப் புனல்கருங் குழற் கற்றை யுறுபோ,
துலையாத காரிருட் கற்றையிற் சுடர்மதியி னெண்ணிலாக்
கதுவல் காட்டி, பொழுதுதொறும் வான்மாரி பெய்யுமா
றிஃதெனவு முயர்வரை மடந்தையென்னுங்,

குலமாது பொற்சிவிறி யிற்கொண்ட குங்குமக் குளிர்பு
லொழுக்க வென்றாம், கொண்டவெயி லவ்விருட் சீறு
கை காட்டியிழி கொள்கைசினவிச் சிதைக்க,

வலியா லுகுங்குருதி மானவுங் கோனேரி வந்துபுன லாடி
ருளே, வனசத் தொழிந்தரியை நகரத் துவந்ததிரு ம
கைபுன லாடியருளே. (ரு)

வேறு,

கேசத்தொடு சைவலமுங்விழிக் கேளோடொழுகுங் கயலி
மும், கேழார்வதனத் தொடுமரையுங் கிளக்குங்கனிவா
யொடுமாம்பல்,

வாசத்தாருங் குழையிணையும் வளையும்வளையு மெழிற்கள
ம், வனக்கொங்கையினே டொண்முகிழும் வயினின்வரை
யும் பயிறிரையு,

நேசத்துந் தியுஞ்சுழியும் ஞெண்டுமுழந்தும் வரால்கணையு,
நீர்வித்துருமத் தொடுவிரலு நேடிக்காணு நிலையரிதாந்,

தேசத் தவர்கொண் டாடரியைத் திருமான் செழுநீ ராடுக
வே, தேவர் பெருமா ளொருதேவி தேனுற் றிடைநீ ராடுக
வே, (சு)

என்றுந் தமையா தரவினெதிர்ந் தெடுத்தார் வளர்த்தா ரிடரு
றத்தா, மேகிப் பாழி வயிறுபெரி தென்ன வயற்பா லெ
துவர்போன்,

மன்றன் மலர்வாய்ச் சிலவளிகள் வாவச் சிலதா மாயினுடன்
மாயுந் தகையோ ரெனப் பெருகு மருவார் கூந்த லுட
மூழ்கத்,

துன்றும் புனன்மற் றன்றியதிற் றேயுங் கயலும் புள்ளின முஞ், சுரர்நா டேந்த கற்பமுடன் றுதையுந் தகர மண மணப்பத்,
தென்றென் றிசைக்கோ ரணியரியைத் திருமான் செழுநீ ராடுகவே, தேவர்பெருமா னொருதேவி தேனுற் றிடைநீ ராடுகவே. (எ)

தகரக் களியாற் சுடருநவுந் தனையை யெனவு மரிசனத் தாற், சமையுஞ் சேற்றால் வாணிநதி தானே யெனவும் வெண் சந்தின்,
பகர்கற்புரத்தின் றண்குழம்பாற் பாகீரதியா நதியெனவும், பரவிப்பொருதுந் தலைமயக்காற் பாயுந்திருவேணிக்கூட்ட,
நிகர்பெற் றிடவும் புவியோர்கூ னீடுஞ்செவிடுமலடுமை, நேய த்தருளா லினிதொழிக்கு நெடுமோலரியக் குடியிடத்துஞ்,
சிகரத்திருவேங் கடத்துமுறை திருமான்செழுநீ ராடுகவே, தேவர்பெருமா னொருதேவி தேனுற்றிடைநீ ராடுகவே.()

வாசமதுவி னதியென்னும் வண்ணமகளார் குழையணிந்து மணியுங்கனக நித்திலமும் வாரிப்புனைந்து சந்தொடகில்,
பூசிமலரின் பொற்சுண்ணம் புனையாத் திமிர்ந்து பூண்முலை மேற், புதிய நறுமென் குழனீவிப் பொலிய மலர் மேற் புனைந்தன்போ,
டாசைமுதிரத் திரைக்கரங்கொண் டாட்டக் கனிவாய்ப்பூமி யெனு, மரிவை கரனுந் தமிழ்க் கோதை யணங்கின் கரனு மிருகைபற்றித்,

தேசுதிகழு மரியைநகர்த் திருமான்செழுநீ ராடுகவே, தேவர்
பெருமா ளொருதேவி தேனுற்றிடைநீ ராடுகவே. (கூ)

பாதங் கமலஞ் செய்யவிரல் பவளம் புறங்கா லெழிற்கமடம்,
பசுமென் கணைக்கால் வரான் முழந்தாள் பருகனுண்டுந்தி
சுழிமடிப்பு,

மோதுந்திரைமென் கொங்கைமரை முகிழுங்கழுத்து வளை
வதன, முளரிகனிவா யாம்பல்வெண்பன் முத்தங்காது
வள்ளைவிழி,

போதம்பானல் கருமுகிலிற் பொலியுங்கூந்தல் சைவலமா
ய்ப், புனலிற்றோன்றப் பொதியவிழப் பொறிவண்டுதேப்
பொடிபறக்குஞ்,

சீதங்கமழும் பொழிலரியைத் திருமான்செழுநீ ராடுகவே,
தேவர்பெருமா ளொருதேவி தேனுற்றிடைநீ ராடுகவே.()

நீராடற்பருவ முற்றும்.

---

## பத்தாவது

## ஊசற்பருவம்.



பாதமலர் பிரியாத பழவடியரைத் தனது படியருளு பழம
னெனவே, பச்சொளியி னவனுள்ள பொருளினைத் தன்
னொளி படுத்து மரகத வூசன்மே,

னீதக விருக்கின்ற தகையவனன் மார்பிலுறை செய்கையை
விரிப்ப வதுகா, ணீள்சுட ரவன்றனு மவ்வாறு பாவனை
செய் நினைவுடைய ளயினனெனப்,

போதினுகு தேனருவி கொண்டுமிசை விண்ணினுயர் பொய்
யில்சுர கங்கைநதியைப், புகரில்கலை நங்கைநதி யாய்விட
வியற்றியெழு பொழிலிடை யில் வந்துலவவே,
பூதல வளங்கொளரி யக்குடி தழைத்தகொடி பொன்னூச
லாடியருளே, பொற்கமல மாளிகையி னற்புத வணங்க
ரசி பொன்னூச லாடியருளே. (க)

வானக மடந்தையர் குழாமிரு பதத்தளிர் வணங்கினர் மரு
ங்கி லுற நின், வாளொளிய செம்பிறையின் மதியினில
விதுகொலென வானில வொழுக்குமணிமுத்,
தானமணி யூசன்மிசை நீயினிது வந்துறைத லமரருட.னசு
ரர்கள்குழா, மலைகடல் கடைந்தபொழு ததன்மிசை யெ
ழுந்ததொரு வதிசயம் விளைப்ப வளவி,
லூனமி லுடுத்திர ளெனப்பல மணித்திர ளொளிச்செறி வெ
றிப்ப வுயர்வா, னுடுபடர் மாளிகை மிசைக்கனக வண்
கொடியு மொண்முகி லுடத் துயல்வரும்,
பூநிகரி லாதவரி யக்குடி தழைத்தகொடி பொன்னூச லாடி
யருளே, பொற்கமல மாளிகையி னற்புத வணங்கரசி
பொன்னூச லாடியருளே. (உ)

மாற்றள விடப்படா தொளிர்பசிய வண்கனக மயமான மணி
யூசன்மேல், வந்தினி திருக்கின்ற தன்றுபொற் கமலத்
தில் வந்ததொரு வண்மையுமலாற்,
சாற்றிய மறைப்பொருள தாமவனெ டுன்னையுயர் தனிவடி
வெனப் பகர்தலாற், றமனிய வனத்தினுட னொளியனி
டத்தி லுறை தன்மையு நிகர்ப்ப மிசைபோய்க்,

காற்றின மலைக்கவுதிர் சருகொடிலை மதுவின்மலர் காய்கனி யனைத்தும் விண்பாற், கங்கையின் விழுந்தெறி கருங்க டன் மடுப்பவுயர் காவுலகளந்த நெடுமால்,
போற்றிகழு கிற்குமரி யக்குடி தழைத்தகொடி பொன்னூச லாடி யருளே, பொற்கமல மாளிகையி னற்புத வணங்கரசி பொன்னூச லாடியருளே. (ங)

பலகோடி யண்டச் சராசரத் தொகுதியொரு படியாகி நந்தி யினிலையிற், படவேத்தி ரங்கைகொடு னிடைமுறையி னிற்பெற்ற பழையதிரு மந்திரத்தை,
யுலகோடி யுழலாது வகுள மாலிகைபுனையு மொருவொளி யினால் வெளிசெயு, மொப்போது தற்கரிய சேனைக்கு நா யகனு முனதுசேவையை விரும்பி,
மலியானை ருக்கியிடு மயனாதி வானவர்கண் மகுடமிசை தா க்கவுதிரு, மணியும் பொனுங்கோயி லலகிடுந் தொண்டர் நீ மகிழ்வினுடைப் புரிந்த,
பொலனார்செய் மலையிற் றிரட்டவரி யைக்கரசி பொன்னூச லாடியருளே, பொற்கமல மாளிகையி னற்புத வணங்க ரசி பொன்னூச லாடியருளே. (ச)

வெள்ளித் தகட்டின மெனத்திகழும் வெண்டோட்டின் வி ரைகமழ் கமலமடமான், வெள்ளடை வியந்தளித் தொரு பருங் குமவிமய மெல்லியலு மற்றொருமருங்,
கொள்ளிற் சுடர்ப்படிக் கங்கையிற் கொடுநிற்ப வொளிர் பொனுல கத்துமடவா, ரோகையொடு மஞ்சலிசெய் திருமருங் கினுமேவ வொண்ணுதற் பெண்வடிவுகாண்,

கொள்ளிற் சினப்பேயு முள்ளிரங் கிடுமென்னல் கொண்டு
மதியமு மிருளுமின், குழுவுமங் கையர்வடி வெடுத்தொ
ளி யவற்சேர்ந்து குறையிரந் திடுவவேய்ப்பப்,
புள்ளுக்கு நிலயமாம் பொழிலரியை யலர்மங்கை பொன்
னூச லாடியருளே, பொற்கமல மாளிகையி னற்புத வண
ங்கரசி பொன்னூச லாடியருளே. (ரு)

ஓதற் கருங்கொண்டல் வான்மறை தரப்பெற்று மோர்தரு
மனத்துவசமா, யுடலெங்கு மிசையப் படைத்திட் டரும்
பெறல வும்பர்பர வத்திகழ்ந்து,
கோதற்ற கோகனக மிசைவந்து திசைமுகங் கொண்டுதண்
மதிபயின்று, கோலக் கலைக்கொடியை யாரப் புணர்ந்து
மொளி கூரத் தழைத் திடுதலாற்,
சீதப் பெருஞ்சுடரின் மாடக்குழாமெலாந் திகழ்நான் முக
த்தனென்னச், சென்ருெளிர நிற்கின்ற வரியக் குடிக்க
ணுயர் செல்வக்கொழுங் கொம்புபோற்,
போதுற் றிலங்கிவள ரலர்மீது மங்கைமகிழ் பொன்னூச
லாடியருளே, பொற்கமல மாளிகையி னற்புத வணங்கரசி
பொன்னூச லாடியருளே. (சு)

தேவர்க ளெண்ணேட்பலரு மாலைய மெனக்குடிகொள் சிகரவட
வரையின்மீது, சிறைவிரித் தன்னக் குழாம்பரந் திடுவ
போற் செய்யதிர வியமாளிகை,
மீவளரும் வெண்கொடி விசும்பினதி யாமென விளங்க வத
னிடை யிடையுலா, மெல்லிய பசுங்கனக வண்கொடி யின
ங்கள்சுர மெல்லியர் வியப்பிறைமெத்,

தாவள நதிப்புனல் படிந்திடுவ ராமென றயங்கிடு வளங்கொ
ளரியைத், தானத்தி லுறைகின்ற வலர்மீது மங்கைநின
தனியடிய ருள்ளமென்னும்,
பூவினிதம் வந்துறைபு மொருமுதன் முதற்றேவி பொன்
னூச லாடியருளே, பொற்கமல மாளிகையி னற்புத வண
ங்கரசி பொன்னூச லாடியருளே. (எ)

கற்பங்கள் பலகோடி செல்லினுந் தொலையாத கடுவினைய
பிறவியென்னுங், கடலைக் கடந்தரிய பரமவீ டென்னு
மொரு கரைபெறற் கெழுதோணியா,
நற்பரஞ் சோதிவடி வாயசட கோபன்முதல் ஞானவாழ்வார்
கள் சொற்ற, நாலாயிரங் கொண்டு துதியா வணங்கிடவு
நாதமுனி யந்தமறையைச்,
சிற்பந் தவிர்ந்ததத ளத்திறமை பிறழாது தேவவிசை யிற்
பாடவுஞ், செய்யசீ ராளவந் தாருமொருகவிநாலு செப்பி
நின் றடிகடொழவும்,
பொற்பினுக் கிடமான வரியக் குடிக்கரசி பொன்னூச லா
டியருளே, பொற்கமல மாளிகையி னற்புத வணங்கரசி
பொன்னூச லாடியருளே. (அ)

என்னிலமு நன்னிலைமை பெற்றுயர் விசும்பினிடை யெய்தி
மகி ழக்கருணைசெய், யெழுபத்து நால்வரெனு மடியரொடு
மெதிராச னிணையடி யிறைஞ்சியேத்த,
நின்னையொரு சேதனரி லிட்டுரைசெய் தவர்வாய் நெருங்க
நிகமத் துனிலையை, நிலையிட்டு நின்னடையு பாயமல தில்லை
யொளி யுலகடைத லெனலையீச,

னுன்னிமறை யுச்சியி னுறும்பொரு ளுரைத்தமையி னோங்கு நிகமாந்தகுருவென், றோதுபெய ருற்றவரு நற்றின மிதென்றுகொ டௌங்களி சிறந்துதொழுநற்,
பொன்னகரு மொப்பி லரியக்குடி தழைத்தகொடி பொன்னூச லாடியருளே, பொற்கமல மாளிகையி னற்புத வணங்கரசி பொன்னூச லாடியருளே. (கூ)

உருமாறி யிடமாறி யொளிமாறி மிகுமன்பி னோங்குதாய் தந்தைமாறி, புறுதொழில்கண் மாறிவுய் வொரு பொழுது காணும லுழல்சேதனக் குழாங்கள்,
கருமாறி வெவ்வினைத் தொடர்மாறி மிக்கபர கதியெய்து மாறுசரண, கமலத்தி னூபுர வனங்களாட ச்சுடர்கலாப துண் ணிடையினுட,
மருமாறி னகையாட நகையாட வருளாட வண்டினங் குழலினுட, மடமாத ரிசைபாட வரமாதர் நடமாட வானவர் கடுதியாடவே,
பொறுமாறு வாஞெடுதி ரரியைக்க ணலர்மங்கை பொன்னூச லாடியருளே, பொற்கமல மாளிகை யினற்புத வணங்கரசி பொன்னூச லாடியருளே. (க0)

ஊசற்பருவம் முற்றும்.

---

## வாழி.

வாழிதிரு மால்வாழி மலர்மங்கை சேனைக்கு மன்முதலவெவரும் வாழி, மகிழ்மாற னுதியா மாழ்வார்கள் வாழியவர் வண்டமிழின் மறைகள் வாழி,-யூழ்வினையி லெழுபத்து

## வாழி.

நால்வரொடு மெதிராச னெப்பிலாவடிகள் வாழி, யோங்கு
வை ணவம்வாழ வந்தநிக மாந்தகுரு வோதுகலை முற்றும்
வாழி,-தாழ்வினா றெட்டெனுந் தலம்வாழி வாழியத் தல
மகிமை வாழி யடியார், தலைமை பெறு மறைவாழி வைணவ
க்குறியைந்து தகவாழி புல்லை யெவ்வுள்,-வீழ்குருகை தென்
னுகை யரியையெனு நகர்மேவு விண்டு வொடு திருமகட்கா
ய், பேவுபிர பந்தங்க ளோரேழு மென்றென்று மேதினியின்
மிகவும் வாழி.

வாழி முற்றும்.



